*சங்க இலக்கியங்களில் தமிழ் இசையியல் தொகுப்பு நூல் வரிசை*

- தொகுதி-1 -

# திருக்குறளில் தமிழ் இசையியல்

முனைவர் செ. அ. வீரபாண்டியன்
*M.Sc (Physics), M.Phil (Applied Physics), B.L, P.G.D.J (Journalism & Mass Communication), P.G.C.S (Sociological Theories), Ph.D (Physics of Tamil Music)*
முதல்வர், சுதர்சன் கலை அறிவியல் கல்லூரி, பெருமாநாடு, புதுக்கோட்டை - 622104 E Mail: pannpandi@yahoo.co.in

## முன்னுரை

ஆபிரகாம் பண்டிதர் 1917-இல் வெளியிட்ட 'கருணாமிருத சாகரம் " என்ற நூலில் பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள இசைத் தொடர்பான வரிகளையும் (Text) தகவல்களையும் வெளியிட்டார். அதன் பின் விபுலானந்த அடிகள் தமது 'யாழ் நூலில் பழந்தமிழ் இலக்கியங்களிலும், குறிப்பாக தேவாரத்திலும் உள்ள இசை தொடர்பான ஆதாரங்களை வெளியிட்டார். தொடர்ந்து முனைவர் எஸ். ராமநாதன் அமெரிக்க பல்கலைக்கழகத்தில் ஆய்வு செய்து 'சிலப்பதிகாரத்தில் இசை நுணுக்கம்' என்ற நூலில் அரிய இசைத் தகவல்களை வெளியிட்டார். முனைவர்.வீ.ப.கா.சுந்தரம் தமிழ் இசை தொடர்பான பல நூல்களை வெளியிட்டிருப்பதோடு, 'தமிழிசை கலைக் களஞ்சியம்' என்ற தலைப்பில் நான்கு அரிய தொகுதிகளை வெளியிட்டுள்ளார். அவர் 'தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புகள்' என்ற நூலையும் வெளியிட்டுள்ளார். அதில் தொல்காப்பியத்தில் உள்ள இசையியல் தொடர்பான பல சான்றுகள் இடம்பெற வில்லை. மற்ற சங்க இலக்கியங்களில் உள்ள தமிழ் இசையியல் தகவல்கள் பற்றி அது போன்ற நூலும் வெளிவரவில்லை. முனைவர் அ. நா. பெருமாள் 'தமிழர் இசை' என்ற நூலிலும், 'தமிழர் தோற்கருவிகள்' என்ற நூலிலும் பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள இசைத் தொடர்பானத் தகவல்களைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளார். முனைவர் பி.டி.செல்லதுரை, சேலம் ஜெயலட்சுமி, பொறியாளர் ப.தண்டபாணி உள்ளிட்ட பலர் இத்துறையில் பல நூல்களை வெளியிட்டுள்ளனர்.

இசை அறிவியல் அடிப்படையில் பழந்தமிழ் இலக்கியங்களை நான் ஆய்வு செய்து பல அரிய தமிழ் இசையியல் தகவல்களை ஆய்வுக் கட்டுரைகள், புத்தகங்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளேன் மேலே சொன்ன நூல்களில் இடம் பெறாத பல அரிய தகவல்கள் எனது ஆய்வின் மூலம் வெளிப்பட்டுள்ளன.

பழந்தமிழ் இலக்கியங்களில் மூலங்களுக்கான (Text) உரைகளில் தமிழ் இசையியல் தொடர்பான பல தகவல்கள் வெளிப்படவில்லை என்பதை எனது 'தமிழிசையின் இயற்பியல்' (Physics of Tamil Music) என்ற முனைவர் பட்ட ஆய்வு மூலமாகவும், தொடர்ந்து மேற்கொண்டு வரும் ஆய்வுகள் மூலமாகவும் நிறுவியுள்ளேன். எனது ஆய்வுகள் வெளிப்படுத்திய தமிழ் இசையியல் தகவல்கள் தமிழ் இசையை மட்டுமின்றி உலக இசையையும் வளர்க்கத் துணைபுரிபவை ஆகும். உதாரணமாக, தொல்காப்பியத்தில் எழுத்தின் ஒலிக்கும், இசையின் சுரம் மற்றும் தாளத்திற்கும் இடையிலான தொடர்பு பற்றிய இலக்கணம் உள்ளது. உலகில் உள்ள எல்லா மொழிகளின் இசைக்கும் பயன்படக்கூடிய அளவுக்கு இது முக்கியத்துவம் கொண்டதாகும். திருக்குறளில் நான் கண்டுபிடித்துள்ள இசையியல் தகவலானது, உலக இசையில் பயன்படக்கூடிய அறிவியல் பூர்வமான இசையமைக்கும் இலக்கணம் (Grammar for music composing )உருவாகத் துணை புரிந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் உள்ள இசைத் தொடர்பான வரிகளுக்கு வெளிச்சம் தரும் இசையியல் தகவல்கள் சங்க இலக்கிய வரிகளில் இருப்பதை நான் எனது ஆய்வுக் கட்டுரைகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளேன். யாழைப் பற்றிய தகவல்கள் சிலப்பதிகாரத்தை விடக் கூடுதலாகப் 'பெருங்கதை'யில் இருப்பதை எனது ஆய்வுகள் மூலம் கண்டறிந்தேன்.

பழந்தமிழ் இலக்கியங்களில் நான் கண்டுபிடித்துள்ள 'இசை இழை' (Musical Thread)யானது புதிதாக வளர்ந்து வரும் 'நுண்ணொலி' (Microsound) மற்றும் இசைத் தகவல் தொழில் நுட்பம் (Music Information Technology) ஆகியத் துறைகளில் பயன்படத் தொடங்கியுள்ளது. உலக அளவில் பழந்தமிழ் இலக்கியங்கள் மீது சிறப்பு கவனம் செலுத்த வேண்டிய அவசியத்தை இந்த ஆய்வுகள் ஏற்படுத்தியுள்ளன.

எனவே, சங்க இலக்கியங்கள் ஒவ்வொன்றிலும் உள்ள தமிழ் இசையியல் தகவல்களை தனித்தனி
நூலாக வெளியிடுவதே 'சங்க இலக்கியங்களில் தமிழ் இசையியல் தகவல்கள் - தொகுப்பு நூல்
வரிசை' முயற்சியாகும். 'திருக்குறளில் தமிழ் இசையியல்', 'தொல்காப்பியத்தில் தமிழ் இசையியல்' 'புறநானூற்றில் தமிழ் இசையியல்' என்று ஒவ்வொன்றாக அடுத்தடுத்து நூல்கள் வெளியிட நான் திட்டமிட்டுள்ளேன். முதலில் தமிழிலும் பின்னர் உலகின் முக்கிய மொழிகளிலும் அவற்றை வெளியிடவும் எண்ணியுள்ளேன்.

-------------

## திருக்குறளில் தமிழ் இசையியல் - ஓர் அறிமுகம்

திருக்குறளில் இசைத் தொடர்பான ' குழல் இனிது யாழ் இனிது என்ப' ( 66 ), ' யாழ்கோடு செவ்விது' (279) என்பது போன்ற மேலோட்டமான இசைத் தகவல்கள் மட்டுமே உள்ளதாக பெரும்பாலோர் எண்ணுகின்றனர். திருக்குறளில் மிகவும் ஆழமான, நுணுக்கமான, நவீன உலக இசை வளர்ச்சிக்குப் பெரும் பங்களிப்பு வழங்கக்கூடிய தமிழ் இசையியல் (Tamil Musicology) தகவல்கள் இருப்பதை எனது ஆய்வுகள் வெளிப்படுத்தியுள்ளன. இது ஏன் இவ்வளவு காலம் இருட்டில் இருந்தது என்பதற்கான காரணம் வருமாறு:

இசை அறிவியலைப் (Science of Music) பயன்படுத்தி நான் பழந்தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி செய்தபோது, சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள Tamil Lexicon, Pre Pallavan Tamil Index உள்ளிட்ட விளக்க அகராதிகளில் இசை தொடர்பான பல சொற்களுக்கு விளக்கம் இல்லை என்பதும், சில சொற்களுக்குத் தவறான விளக்கம் தரப்பட்டுள்ளது என்பதும் தெளிவானது. இந்த அகராதிகள் பெரும்பாலும் உரையாசிரியர்கள் தந்த விளக்கங்கள் அடிப்படையிலேயே உருவானதாகும்., இசை தொடர்பான சொற்கள் உள்ள மூலவரிகளுக்கு (Text) பல இடங்களில் உரையாசிரியர்கள் சரியான விளக்கம் தரவில்லை என்பது எனது ஆய்வில் தெளிவானது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் தமிழ் மற்றும் இசைத் துறைகளைச் சார்ந்த பேராசிரியர்கள், முனைவர் பட்ட ஆய்வாளர்கள் முன்னிலையில் இது தொடர்பான செய்முறை- விளக்க உரை (Lecture cum Demonstration) நிகழ்த்தினேன். இது தொடர்பான எனது ஆய்வுக் கட்டுரைகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இதழிலும், பிற ஆய்வு நூல்களிலும் வெளிவந்துள்ளன. ஆங்கிலத்தில் 'Ancient Music Treasures - Exploration for New Music' ( தொல் இசைப்புதையல்- புதிய இசைக்கான தேடல்) என்ற புத்தகத்தையும் வெளியிட்டுள்ளேன். அமெரிக்காவில் 2006 மற்றும் 2007 -இல் நடந்த சர்வதேச ஆய்வு மாநாடுகளில் (Hawaii International Conference on Arts & Humanities) எனது ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெற்றன. சில கட்டுரைகள் www.musicresearch.in இணைய தளத்தில் வெளியிடப்பட்டுள்ளன. திருக்குறளில் நான் மேற்கொண்ட ஆய்வின் முடிவுகள் இம்முதல் தொகுதியில் இடம் பெறுகின்றன.

வாசகர்களின் சார்பற்ற படிப்பிற்கும் (Objective reading), ஆர்வமுள்ளவர்களின் தனித்த ஆய்விற்கும் பயன்படும் வகையில் கீழ்வரும் திட்டமுறையில்(Methodology) இந்நூலை வடிவமைத்துள்ளேன்.

இம்முதல் தொகுதியில் 'திருக்குறளில் தமிழ் இசையியல்' தொடர்பாக புதிய தகவல்களை வெளிப்படுத்திய திருக்குறள் வரிகள் முதலில் இடம் பெறும். அடுத்து அவ்வரிகளில் உள்ள

புதிய இசையியல் தகவல்கள் தொடர்பான ஆய்வு அறிமுக உரை சுருக்கமாக இடம்பெறும். அதன்பின் அவ்வரிகளுக்கான உரையாசிரியர்களின் உரைகள் இடம் பெறும். உரைகள் தரும் விளக்கங்களுக்கு முதலில் திருக்குறளை மக்கள் அரங்கில் கொண்டு செல்வதில் முக்கியப் பங்காற்றிய மு.வரதராசனாரின் உரை அறிமுகமாக இடம் பெறுகிறது. இறுதியாக எனது ஆய்வு விளக்கம் இடம் பெறும். இவ்விளக்கத்தில் எனது ஆய்வு முடிவுகளும், மேலும் ஆய்வு மேற்கொள்ள வேண்டியிருப்பின் அவை தொடர்பான குறிப்புகளும் இடம் பெறும். இம்முதல் தொகுதி வெளிப்படுத்தும் வாசகர்களின் கருத்துக்கள் அடிப்படையில் மேற்க்கூறிய திட்டமுறை மேம்படுத்தப்படும்.

திருக்குறளில் புதிய இசையியல் தகவல்கள் பற்றிய ஒரு தொடர்ச்சியானப் புரிதலை வாகர்களுக்கு ஏற்படுத்தும் வகையில் இந்நூலில் இடம் பெறும் குறள்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

## புதிய இசையியல் தகவல் - குறள் 821

" சீர் இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. "

ஆய்வு அறிமுக உரை:

மேற்சொன்ன இக்குறளில் முதல் வரியில் இடம் பெற்றுள்ள 'பட்டடை' என்ற சொல் இசையில் மிக முக்கிய பங்கு வகிக்கும் ச-ப இசைச்சுர உறவைக் குறிக்கும். இதனைச் சிலப்பதிகாரம், பஞ்ச மரபு,

கல்லாடம், ஆனாயநாயனார் புராணம் ஆகிய இலக்கியங்களில் உள்ள வரிகள்(Text) உறுதிப்படுத்தியுள்ளன. அதே போல் எழுத்தொலியின் இசையை அடிப்படையாகக் கொண்டே அசை, சீர் போன்ற பண்ணின் உட்பிரிவுகள் உருவாகின்றன என்பதற்குத் தொல்காப்பியம் உள்ளிட்டு பழந்தமிழ் இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன. ஆனால் மேலே சொன்ன குறளுக்கான உரைகளில் பட்டடை என்பதைக் கொல்லன் உலையில் தாங்கி நின்று வெட்டப் பயன்படும் பட்டரையாகக் கருதி விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. சீர் என்பது பண்ணில் மிக முக்கிய இசை உட்பிரிவாகச் செயல்படுவதும் இவ்விளக்கங்களில் கணக்கில் எடுத்துக்கொள்ளப் படவில்லை. இவ்வாறு கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் தரப்படும் முதல் வரியில் உள்ள உதாரணத்தைப் பற்றிய விளக்கம் இரண்டாவது வரி உணர்த்தும் பொருளுக்கு ஒத்துப் போகிறதா என்றும் பார்க்க வேண்டும். இந்தப் பின்னணியில் உரைகள் தரும் விளக்கங்களைப் பார்ப்போம்.

### உரைகள் தரும் விளக்கங்கள்:

மு. வ. உரை: அகத்தே பொருந்தாமல் புறத்தில் பொருந்தி நடப்பவரின் நட்பு, தக்க இடம் கண்டபோது எறிவதற்கு உரியப் பட்டடை ஆகும்.

பரிமேலழகர் உரை: நேரா நிரந்தவர் நட்பு - கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் கூடியொழுகுவார் நட்பு ;

சீர் இடம் காணின் எறிதற்குப் பட்டடை - அது பெற்றால் , அற எறிதற்குத் துணையாய பட்டடையாம் என்றவாறு.

எறியுமெல்லை வாராமுன் எல்லாம் தாங்குவது போன்று இருந்து வந்துழி அற எறிவிப்பதாய பட்டடைக்கும் அத்தன்மைத்தாய நட்பிற்கும் தொழிலொப்புமை உண்மையான், அது பற்றி அந்நட்பினைப் பட்டடையாக உபசரித்தார். ' தீர்விடம்' என்று பாடம் ஓதி 'முடிவிடம்' என்று உரைப்பாரும் உளர்.

மணக்குடவர் உரை: முடியுமிடங்காணின், மற்றொருவன் எறிதற்குப் பட்டடையாம். மனத்தினால் ஒவ்வாது புறத்து வேறுமிகச் செய்து வந்தாரது நட்பு என்றவாறு.

இது, கருமங்காரணமாக நட்டாரோடு கூடும் திறம் கூறிற்று. பட்டடையாவது தான் தாங்குவது போல் நின்று வெட்டுவார்க்கு உதவி செய்வது.

பரிப்பெருமாள் உரை : முடியும் இடம் காணின் மற்று ஒருவன் எறிதற்குப் பட்டடையாம், மனத்தினால் நேராது புறம் ஒத்தார் போல ஒழுகுவாரது நட்பு என்றவாறு.

பட்டடையாவது தான் தாங்குவது போல நின்று வெட்டுவார்க்கு உதவி செய்வது. இது கூடா நட்பினால் வரும் குற்றம் கூறிற்று.

பரிதியார் உரை : ஒருவனை நட்புக் கொண்டு அவன் உள்பாடெல்லாம் அறிந்து இவனுக்கு ஒரு குற்றம் வந்தால் அந்தக் குற்றமே முன்னாக எண்ணுவான். அது என்போல் எனின் பட்டடையும் கரும்பும் போலத் தறிப்பார் என்றவாறு.

காலிங்கர் உரை : தமக்கு ஏறத் திருந்தின இடம் காணின் அவரைத் தாம் கொல்லுதற்குப் பட்டடை; யாது எனின் ; தமது அகத்து ஒவ்வாராய்ப் புறத்து ஒருவரோடு ஒத்தார் போன்று உள்ளவர் நட்பு என்றவாறு.

குறிப்பு: குறள் 821-இல் 'சீரிடம்' என்பதற்குப் பதிலாக ' தீர்விடம்' என்பதே சரியென்பது மணக்குடவர், பரிப்பெருமாள் மற்றும் காலிங்கர் ஆகியோரின் கருத்தாகும்.

## ஆய்வு விளக்கம்:

முதலில் பட்டடை என்றால் என்ன என்பதையும் அது தொடர்பானச் சான்றுகளையும் பார்ப்போம்.

தமிழிசையில் ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு சுர எழுத்துக்களின் சுரப்பெயர்கள் முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகும். ச-என்ற சுரத்திற்கும் அதற்கு மேல் ஐந்தாவதாக உள்ள ப- என்ற சுரத்திற்கும் இடையிலான ச-ப இசை உறவு என்பது இசையில் இனிமை தரும் (Consonant) இசை உறவாகும். இந்த ச-ப இசை உறவு தமிழிசையில் பட்டடை என்ற சொல்லால் அழைக்கப்பட்டது. ஆபிரகாம் பண்டிதர், விபுலானந்த அடிகள், எஸ். ராமநாதன், வி.ப.கா.சுந்தரம் உள்ளிட்ட அனைத்துத் தமிழிசை ஆய்வாளர்களிடையே ( இசைச்சுர உறவு பற்றி கருத்து வேறுபாடு இருந்தாலும்) இது தொடர்பாக எந்தக் கருத்து வேறுபாடும் கிடையாது. பட்டடைத் தொடர்பானச் சான்றுகளை அடுத்து பார்ப்போம்.

பட்டடை என்றால் என்ன என்பதற்கான சான்று 'பஞ்ச மரபு' என்ற நூலில் உள்ளது. (அடிக்குறிப்பு : பஞ்ச மரபு' என்ற நூலிலிருந்து சிலப்பதிகார உரையாசிரியர்கள் பல மேற்கோள்களைப் பயன்படுத்தியுள்ளார்கள். 1970-களில் தெய்வசிகாமணிக் கவுண்டர் பஞ்ச மரபு' சுவடியைத் தேடிக் கண்டுபிடித்து, புரவலர் பொள்ளாச்சி மகாலிங்கத்தின் உதவியில் அச்சடித்து வெளியிட்டுள்ளார். இவருக்குக் கிடைத்த 'இசை நுணுக்கம்' என்ற சுவடி பணவசதியின்றி அச்சடிக்கத் தாமதமானதால் அழிந்து போனது.)

"முற்றிய இளிதனை முறைமையினமைய
பற்றி யெழுப்புதல் பட்டடையாகும். " - பஞ்ச மரபு- 8

இளி என்பது ப எனும் இசைச் சுரத்தைக் குறிக்கும் என்பதை முன்னர் பார்த்தோம். ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு சுரங்களில் ச-வுக்கு மேல் 5-ஆவதாக வரும் சுரம் ப ஆகும். இது பட்டடை உறவாகும். ச மட்டுமின்றி எந்த ஒரு சுரத்திற்கும் மேல் 5-ஆவதாக வரும் சுரம் அந்த சுரத்திற்கான பட்டடை ஆகும். இத்தகைய முறையில் எந்த ஒரு சுரத்திற்கும் மேல் 5-ஆவதாக வரும் வகையில் அந்த ஒரு சுரத்தைக் குறிப்பாகக் (Reference) கொண்டு

சரியாக சுருதி சேர்க்கப்பட்டு இசையில் எழுப்பப்படும் 5-ஆவதாக வரும் சுரமே (முற்றிய இளிதனை முறைமையினமைய பற்றி யெழுப்புதல் ) பட்டடையாகும்..

பட்டடை தொடர்பான இவ்விளக்கத்தை மேலும் தெளிவுபடுத்தும் சான்று கல்லாடம் என்ற நூலில் உள்ளது. அச்சான்றினைப் பார்க்கும் முன் தமிழிசையில் கிளை என்றால் என்ன என்பது பற்றித் தெளிவு பெற வெண்டும்.

பண்ணிசையில் இடம் பெறும் ஒவ்வொரு சுரமும் தமக்கு முன்னதாக அல்லது பின்னதாக இடம் பெறும் இசைச்சுரத்துடன் கொண்டுள்ள இசை உறவு நான்கு வகைகளில் ஒன்றாக இருக்கும். அந்நான்கு வகைகள் முறையே இணை, கிளை, பகை, நட்பு என்று அழைக்கப்படும்.

பட்டடை தொடர்பாகக் கல்லாடம் தரும் சான்றினை விளங்கிக் கொள்ள கிளை பற்றிய தெளிவு அவசியமாகும். எந்த ஒரு சுரத்திற்கும் மேல் 5-ஆவதாக வரும் சுரம் கொண்டுள்ள இசை உறவே கிளையாகும். அதாவது சுருதி சேர்த்தல், பாலையில் இடம் பெறுதல் போன்ற இசைப் பணிகளில் பங்கு வகிக்கும் பட்டடையானது இசை உறவில் கிளை என்று பெயர் பெற்றுள்ளது. இந்தப்
புரிதலுடன் கல்லாடம் தரும் சான்றினைப் பார்ப்போம்.

" பட்டடை யெடுத்துப் பாலையில் கொளுவி
கிளையிற காட்டி யைம்முறை கிளத்தி " - கல்லாடம் செய்யுள் க00- வரி க0

இசை உறவில் கிளை என்றால் என்ன என்பதைப் பற்றி சிலப்பதிகார உரை மேற்கோள் காட்டிய சூத்திரம் வருமாறு:

" கிளை - ஐந்து நரம்பு ; என்னை?
' கிளையெனப் படுவ கிளக்குங் காலைக்
குரலே யிளியே துத்தம் விளரி கைக்கிளை யெனவைந் தாகுமென்ப' "
- சிலப்பதிகாரம் - வேனிற்காதை 33-34 உரை

கிளை உறவினைக் கீழ்வரும் படம் தெளிவுபடுத்தும்.

| 1 | 2 | 3 | 4 | 5 | (ஐந்து நரம்பு) |
|---|---|---|---|---|---|
| குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | |
| இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | |
| துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | |
| விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | |

'கிளையிற காட்டி யைம்முறை கிளத்தி' என்பது கிளை நரம்பான ஐந்தாம் நரம்பு என்ற முறை சொல்லும் நிகழ்வே பட்டடை என்பதும், இவ்வாறு பட்டடை என்னும் இசைக் கரணம் மூலம் உருவான இசைச் சுரங்களை (நரம்புகளை) பாலையில் வைத்து இசைத்தல் என்பதும் இங்கு தெளிவாகிறது.

பட்டடை என்பது இசைக்கரணம் என்பதைக் கீழ்வரும் சான்று தெளிவு படுத்துகிறது.

சிலப்பதிகாரம் கானல் வரிப் பாடல்கள் (வரி 12-14) ' வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், ஏருடைப்பட்டடை' என்ற எட்டு வகை 'இசைக் கரணங்களை'க் குறிப்பிட்டுள்ளன.

கர்நாடக இசையில் 'இராகம்' என்று இருப்பது போல் அதிலிருந்து சற்று வேறுபட்டு, இசைக்கப்படும் இசையில் என்னென்ன சுரங்கள் இடம் பெறும், அது தவிர இசைப்பில் என்னென்ன அழகியல் நுணுக்கங்கள் இடம் பெறும் என்பது பற்றியதே பாலையாகும்.

பட்டடை என்னும் இசைக்கரணம் பாலையுடன் தொடர்பு கொண்டுள்ளதைக் கீழ்வரும் சான்று தெளிவு படுத்துகிறது..

" கூறிய பட்டடை குரலாய் கோடிப் பாலையில் நிறுத்தி"

- ஆனாயநாயனார் புராணம் -25

கருவியிசையில் வண்ணம் தொடர்பான இசை அழகியலில் பட்டடை வகிக்கும் பங்கைக் கீழ்வரும் சான்று தெளிவு படுத்துகிறது..

' வண்ணப் பட்டடை யாழ் மேல் வைத்தாங்கு
இசையோன் பாடிய இசையின் இயற்கை"

- சிலப்பதிகாரம் - அரங்கேற்றுக் காதை வரி 63-64




பட்டடை பற்றிய தெளிவிற்கு மேலேயுள்ள படம் துணை புரியும். ஹெல்ம்ஹோல்ட்ஸ் (Helmholtz) எனும் விஞ்ஞானி இரண்டு வயலின் இசைக்கருவிகளை இசைக்கச் செய்து நடத்திய சோதனை முடிவுகளின் அடிப்படையில் உருவான வரைபடம் மேலே உள்ளது.( பக்கம் 20, Physics of Music
þ Alexander Wood ). அதன்படி ஒரே நேரத்தில் சமன்தான குரலும் ( மத்திய ஸ்தாயி ச - மேற்கத்திய இசையில் Middle Octave C ) வலிவுதானக் குரலும் ( தாரஸ்தாயி ச - Higher Octave C) இசைக்கப்படும்போது , அவை இரண்டும் இனிமை தரும் உறவில் (Consonant) இருப்பதை, அச்சுக்கோட்டைத் தொட்டு உணர்த்துகின்றன. இது தமிழிசையில் இணை உறவாகும்.

அடுத்து ஒரே நேரத்தில் சமன்தான குரலும் ( மத்திய ஸ்தாயி ச - மேற்கத்திய இசையில் Middle Octave C ) சமன்தான இளியும் ( மத்திய ஸ்தாயி ப - Middle Octave G ) இசைக்கப்படும்போது , அவை இரண்டும் இனிமை தரும் உறவில் (Consonant) இருப்பதை, அச்சுக்கோட்டைத் தொட்டு உணர்த்துகின்றன. இது தமிழிசையில் பட்டடை உறவாகும். இசைச்சுரங்களுக்கான உறவில் கிளையாகும்.

பட்டடையில் சுருதிக்குறைவு (pitch defect) சிறிது ஏற்பட்டாலும், அச்சுக் கோட்டிலிருந்து பெரிதும் விலகி இனிமை கெட்டு ஒலிப்பதை (Dissonance) மேலேயுள்ள படம்

விளக்குகிறது. ப-வைத் தவிர்த்து மற்ற எந்தச் சுரமும் இவ்வாறில்லை என்பதையும் மேலேயுள்ள படம் விளக்குகிறது.

தமிழிசையில் பட்டடையின் முக்கியத்துவம் குறித்த சான்றுகளையும், அவை தெரிவித்த இசையியல்
தகவல்களையும் பார்த்தோம். அடுத்து 'சீர்' பற்றிய சான்றுகளைப் பார்ப்போம்.

பண்ணின் இசை அடிப்படையிலேயே அசை மற்றும் சீர் ஆகிய பிரிவுகள் உருவாகிச் செயல்படுவதற்குப் பழந்தமிழ் இலக்கியங்களில் நிறைய சான்றுகள் உள்ளன. அவை பற்றிய விளக்கம் 'சீரும் இசையும்' என்ற தலைப்பில் உள்ளது. சீர் பற்றிய சான்றுகளையும் அவை தரும் விளக்கங்களையும் அடுத்துச் சுருக்கமாகப் பார்ப்போம்.

சீர் தொடர்பான இசையியல் தகவல்களைத் தெரிவிக்கும் சான்றுகள் ஐந்திறம், தொல்காப்பியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலவிருத்தி, பஞ்சமரபு, புறநானூறு, அகநானூறு, ஐந்திணை ஐம்பது, மதுரைக் காஞ்சி, பொருநர் ஆற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை திருமுருகாற்றுப்படை, கலித்தொகை, பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை,, பெருங்கதை உள்ளிட்ட பல இலக்கியங்களில் உள்ளன. குறிப்பாக சீர் என்பது அசைகள் சேர்ந்து உருவாக்குவது என்பது மட்டுமின்றி பண்ணின் 'பாலை நிலை, பண்ணு நிலை, வண்ணக் கூறுபாடு, தாளக் கூறுபாடு ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ள மிக முக்கியமான இசை உட்பிரிவு ( Most significant music substructure) ஆகும்.

சீரில் பட்டடை வகிக்கும் பங்கினை ஆராயுமுன் 'எறிதல்' என்ற சொல்லின் இசைத் தொடர்பான பொருளைப் பார்ப்போம். இசை தொடர்பாக 'எறிதல்' என்ற சொல் பஞ்ச மரபில் (10) பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை இங்கு பார்ப்போம்

" வழுவா தெறிதல்" - பஞ்ச மரபு
'தவறு ஏற்படாமல் எறிதல்' என்பதே 'வழுவா தெறிதல்' என்பதன் பொருளாகும்.

"எய்த லெறிதல்" - பஞ்ச மரபு

பொருந்தும் வகையில் எறிதலே 'எய்த லெறிதல்' என்பதன் பொருளாகும்.

"உரம் பெற எறிதல்" - பஞ்ச மரபு

'உரம்' என்பது 'அறிவு, திடம், வலிமை' ஆகியவற்றைக் குறிக்கும். இப்பண்புகளை உள்ளடக்கி எறிதலே 'உரம் பெற எறிதல்' என்பதன் பொருளாகும். அடுத்து பட்டடையை இசையில் பயன்படுத்துவது தொடர்பான சொற்களைப் பார்ப்போம்.

பட்டடைத் தொடர்பாக 'நிறுத்தி' என்ற சொல் "கூறிய பட்டடை குரலாய் கோடிப் பாலையில் நிறுத்தி" என்று ஆனாயநாயனார் புராணத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளதை ஏற்கனவே பார்த்தோம்.

பட்டடைத் தொடர்பாக 'வைத்து' என்ற சொல் "வண்ணப் பட்டடை யாழ் மேல் வைத்து" என்று சிலப்பதிகாரத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளதை ஏற்கனவே பார்த்தோம்.

பட்டடைத் தொடர்பாக 'கொளுவி ' ' என்ற சொல் "பட்டடை யெடுத்துப் பாலையில் கொளுவி" என்று கல்லாடத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளதை ஏற்கனவே பார்த்தோம்.

'நிறுத்தி', 'வைத்து', 'கொளுவி' ஆகிய நிகழ்வுகளுக்கு உள்ளாகாமல், 'வழுவா தெறிதல்', 'எய்த லெறிதல்' , 'உரம் பெற எறிதல்' ஆகிய நிகழ்வுகளுக்கும் உள்ளாகாமல், சீருக்குள் வெறும் எறிதலுக்கு உள்ளாகும் பட்டடை என்ன விளைவை ஏற்படுத்தும் என்பதை அடுத்துப் பார்ப்போம்.

பண்ணில் மிக முக்கியமான இசை உட்பிரிவு சீர் என்பதை ஏற்கனவே பார்த்தோம். சீருக்குள் இடம் பெற்றுள்ள எழுத்துக்களின் ஒலிகள் பண்ணிற்கு ஏற்ற இசைச்சுர ஒலிகளுக்குப் பொருந்தி ஒலிக்க வேண்டும். அவ்வாறு சீருக்குள் ஒழுங்கான வரிசையில்

அமைந்திருக்கும் இசைச்சுரங்கள் சீரின் அகத்திலும் புறத்திலும் பொருந்திய சுரங்களாகும். சீருக்குள் உள்ள சுரங்கள் வரிசை மாறி அமைந்திருந்தால் அவை சீரின் அகத்தில் பொருந்தாமல் அமைந்துள்ள சுரங்களாகும். ஆனால் புறத்திலிருந்து நோக்கும்போது, அவை சீரின் புறத்தில் பொருந்திய சுரங்களாகும்.

இவ்வாறு சீரின் அகத்தில் பொருந்தாமல் புறத்தில் பொருந்தியுள்ள சுரங்கள் இசை எழுப்பும்போது பண்ணின் இனிமைக் கெடவே ஒலிக்கும். ஏனெனில் சுரங்கள் இசைக்க வேண்டிய வரிசையில் ஒலிக்காமல் வரிசை மாறி ஒலிப்பதால் இவ்விளைவு ஏற்படுகிறது.

பொதுவாக சீருக்குள் இடம் பெறும் சுரங்கள் பின்வருமாறு அமைந்திருக்கும். சீரில் இடம் பெறும் முதல் எழுத்தொலி அமைந்த அசைக்குப் பொருத்தமான இசைச்சுரம் முதலில் இடம் பெறும். ஒரு அசைக்கு ஒன்றோ அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட சுரங்களோ அசையின் தன்மைக்கு ஏற்றவாறு இடம் பெறும். இம்முறையில் அந்தச் சீருக்கான அசைகளைப் பொறுத்து அந்த சீருக்குள் ஒன்றோ அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட சுரங்களோ அந்தக் குறிப்பிட்ட வரிசையில் அமைந்திருக்கும். ஒன்றுக்கும் மேற்பட்ட சுரங்கள் உள்ள சீரை அடுத்துப் பார்ப்போம்.

பண்ணிற்குள் அமைந்துள்ள ஒரு சீரில் ஒன்றுக்கும் மேற்பட்ட சுரங்கள் இருக்கும்போது, அந்த சுரங்களில் எந்த ஒரு சுரத்திற்கும் முன்னோ அல்லது பின்னோ அமைந்துள்ள சுரம் அதே சுரமாகவோ அல்லது பண்ணிற்கான ஸ்கேலில் (Scale- என்னெனன சுரங்கள் பண்ணில் இடம் பெறும் என்ற வரிசை) அந்த சுரத்திற்கு ( ஆரோகண, அவரோகணத்தில் - ஏறு நிரல், இறங்கு நிரலில்) அடுத்த சுரமாகவோ இடம் பெறலாம். சில சமயம் அடுத்தடுத்த எழுத்தொலிகளுக்கான சுரங்கள் பட்டடை உறவில் அமைந்திருக்கலாம். அதாவது இரண்டாவது சுரம் முதல் சுரத்தி.ற்கு மேல் 5-ஆவது (ச-ப முறையில்) சுரமாக இடம் பெறும்.

பாடலில் இவ்வாறு இரண்டாவது சுரம் முதல் சுரத்தி.ற்கு மேல் 5-ஆவது (ச-ப முறையில்) சுரமாக இடம் பெறும்போது அது 'முறை நிறுத்து எடுத்த கிளை உறு பாடல்' என்று அழைக்கப்பட்டதைக் கீழ்வரும் சான்று உணர்த்துகிறது.

" கின்னரர் முறை நிறுத்து எடுத்த கிளை உறு பாடல் "
- கம்பராமாயணம் சுந்தர காண்டம் 88

யாழ் இசைப்போன் பண்ணின் வேகத்தில் சீருக்குள் அடுத்தடுத்த சுரங்களை எழுப்பும் போது ஒரு குறிப்பிட்ட சுரத்தி.ற்கு அடுத்த சுரம் பட்டடை உறவில் அமைந்திருப்பதைச் சந்திக்கும்போது, மிகவும் கவனமாக ( 'நிறுத்தி', 'வைத்து', 'கொளுவி', 'வழுவா தெறிதல்', 'எய்த லெறிதல்' , 'உரம் பெற எறிதல்' ) அந்த வரிசையில் அந்த இசைச்சுரத்தை எழுப்ப வேண்டும். சிலப்பதிகாரத்தில் யாழின் எட்டு வகை இசைக்கரணங்களில் இவ்வாறு கவனமாக பட்டடைச் சுரத்தை இசை எழுப்புவது 'ஏருடைப் பட்டடை' என்று அழைக்கப்பட்டது. இதற்கானச் சான்றினை முன்னர் பார்த்தோம்.

பண்ணின் வேகத்தில் யாழ் இசைப்போன் கவனக்குறைவாக ( வெறும் எறிதல்) இசை எழுப்பும்போது பட்டடைக்கான சுரம் அந்தச் சீருக்குள் வரிசையில் இடம் மாறி ஒலிக்க வாய்ப்புண்டு. அத்தகையப் பட்டடை சீரின் அகத்தில் பொருந்தாமல் புறத்தில் மட்டும் பொருந்தி ஒலிக்கும் பட்டடை ஆகும். அத்தகையப் பட்டடை பண்ணின் இசை இனிமையை, வண்ண அழகைக் கெடுக்கும்.

சீர் என்பது ஒன்றுக்கும் மேற்பட்ட சுரங்களைத் தன் அகத்தே கொண்டு விளங்கும் நிலையில், அந்தச் சீரில் பொருத்தமான வண்ணக்கூறுபாட்டில் முக்கியப் பங்கு வகிக்கும் பட்டடை ('வண்ணப் பட்டடை') இடம் பெற வேண்டிய நிலை ஏற்பட்டால் ('காணின்') அந்தச் சீருக்குண்டான சுர வரிசையில் பட்டடை மூலம் பிறக்கும் இசைச்சுரம் அந்த வரிசையில் எந்த இடத்தில் பொருந்த வேண்டுமோ அங்கு பொருந்தினால்தான் அது அகத்திலும் புறத்திலும் பொருந்தி ஒலிக்கும் பட்டடை ஆகும். அப்போது பண்ணிசை உரிய வண்ண அழகுடன் ஒலிக்கும்.

மாறாக அந்தச் சீருக்குண்டான சுர வரிசையில் இடம் மாறி அதே சீரில் வரிசையில் வேறு இடத்தில் பொருந்தினால் அது அகத்தில் பொருந்தாமல் புறத்தில் பொருந்தி ஒலிக்கும் பட்டடை ஆகும். அப்போது பண்ணிசை உரிய வண்ண அழகுக் கெட்டு இனிமை கெட ஒலிக்கும்.

இது அகத்தில் பொருந்தாமல் புறத்தில் பொருந்திய நட்புக்கு ('நேரா நிரந்தவர் நட்பு') உதாரணமாகக்
திருக்குறளில் (821) விளக்கப்பட்டுள்ளது.

உரைகளில் கொல்லன் உலையில் கருவிகள் செய்ய துணை புரியும் நேரான பணிக்கான (positive function) பட்டரையை 'நேர நிரந்தவர் நட்பு' -ஆகிய எதிரான பணிக்கு (negative function) உதாரணமாகக் கொள்வது கீழ்வரும் காரணத்தாலும் தவறாகும்.

உதாரணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ள திருக்குறள்களை ஆராய்ந்தால் பின்வரும் உண்மை வெளிப்படும்.

நேரான பணிக்கான (positive function) உதாரணங்கள் நேரான நெறிகளுக்கும், எதிரான பணிக்கான (negative function) உதாரணங்கள் தவிர்க்க வேண்டிய தவறான நெறிகளுக்கும், திருக்குறளில் உதாரணங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நேரான பணிக்கான (positive function) உதாரணங்கள் நேரான நெறிகளுக்கு பயன்படுத்தப்பட்டதற்கான சான்றுகள் வருமாறு.

1. 'உடுக்கை இழந்தவன் கை' (788) 2. 'தொட்டனைத்தூறும் மணற்கேணி (396) 3. 'சமன் செய்து சீர் தூக்கும் கோல்' (118) 4. 'சிறை காக்கும் காபபு' (குறள் 57) 5..'குழல் இனிது யாழ் இனிது என்ப '(66) 6. 'ஊருணி நீர் நிறைந்தற்றே ' (215) 7.' பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் ' ( 216)

எதிரான பணிக்கான (negative function) உதாரணங்கள் தவிர்க்க வேண்டிய தவறான நெறிகளுக்குப் பயன்படுத்தப்பட்டதற்கான சான்றுகள் வருமாறு.

1. ' தீயினால் சுட்ட புண்' (129) ( 969) 2. ' என்பிலதனை வெயிலில்' ( 77) 3. ' மோப்பக் குழையும் அனிச்சம்' (90) 4.. 'பண் என்னாம் பாடற்கு இயைபின்றேல்' ( 573) 5. ' கனியிருப்பக் காய் கவர்ந்தற்று ' (100) 6. 'மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் ' 7. ' வில்லேர் உழவர் பகை ' ( 872)

எனவே கொல்லன் உலையில் கருவிகள் செய்ய துணை புரியும் நேரான பணிக்கான (positive function) பட்டரையை 'நேர நிரந்தவர் நட்பு' -ஆகிய எதிரான பணிக்கு (negative function) உதாரணமாகக் கொண்டு எழுதிய உரைகள் தவறு என்பது தெளிவாகிறது. சீரிடம்' என்ற சொல்விற்குப் பதிலாக மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய உரையாசிரியர்கள் ' தீர்விடம்' என்று பாடம் ஓதி 'முடிவிடம்' என்று விளக்கம் கண்டது தவறு என்பதும் தெளிவாகிறது.

சீருக்கும் இசைக்கும் இடையிலான தொடர்பு பற்றியும், அதனடிப்படையில் ஒரு பாடலுக்குச் சுர இசை மற்றும் தாள இசை அமைப்பது தொடர்பான இலக்கணம் பற்றியும், எழுத்தின் மொழிக்கும் இசைக்கும் இடையிலான தொடர்பு பற்றியும், இசைத் தகவல் தொழில் நுட்பம் (Music Information Technology) மற்றும் நுண்ணொலி (Microsound) ஆய்வில் முக்கிய இடம் பெறும் இசை இழைப்(Musical thread) பற்றியும் நான் மேற்கொண்டு வரும் ஆய்வுகளுக்குத் திறவுகோள்களில் ஒன்றாக திருக்குறள் 821 பற்றிய இசையியல் ஆய்வுகள் அமைந்தன.

---